*சப்-டிரஷரி (காரைக்குடி)*

***104 கேள்வி.—திரு. சா. கணேசன்:** கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

காரைக்குடியில் ஒரு சப்-டிரஷரியைத் தொடங்க உத்தேசமுண்டா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: There is a proposal under the consideration of the Government to open a sub-treasury at Karaikudi.

*Water-supply for Madras City*

*105 Q.—SRI M. KALYANASUNDARAM:
SRI P. V. SRIRAMULU:
SRI K. A. MATHIALAGAN:
} Will the Hon. the Minister for Health be pleased to state—

(a) whether the Government have ordered the investigation of the scheme for the supply of drinking water to the City of Madras from the Cauvery; and

(b) if so, the result thereof?

THE HON. SRIMATHI JOTHI VENCATACHELLUM: (a) Yes.

(b) The investigation report in the matter has recently been received from the Chief Engineer, Public Works Department (General), and it is under examination.

திரு. கே. ஏ. மதியழகன்: கடந்த மூன்றாண்டுகளுக்கு முன்பு ஏழு கிணறு பகுதியில் நடைபெற்ற ஒரு கல்யாணமண்டபத் துவக்க விழாவில், காவேரியில் இருந்து சென்னை நகரத்திற்குப் தண்ணீர் கொண்டுவரும் விஷயத்தில் அதை மிக விரைவில் கவனிப்பதாக கனம் முதல் அமைச்சர் அவர்கள் வாக்குறுதி அளித்தார்கள். மூன்று ஆண்டுகள் ஆன பிறகும் இன்னும் அந்த ஆராய்ச்சி இருந்துகொண்டிருக்கிறது என்று சொல்லப்படுகிறது. இந்த நெருக்கடியான பிரச்சனையைத் தீர்ப்பதற்கு கனம் முதல் அமைச்சர் அவர்கள் எடுத்துக்கொண்ட விசேஷ அக்கறை என்னவென்று அமைச்சர் அவர்கள் சொல்வார்களா?

கனம் திரு. கு. காமராஜ்: கனம் அங்கத்தினர் அவர்கள், சென்னை நகரத்திற்கு குடிதண்ணீர் அளிக்கும் விஷயத்தில் சிரத்தை எடுத்துக்கொள்ளவில்லை என்பதைக் காட்டவேண்டுமென்பதுபோல் கேட்கிறார்கள். அரசாங்கம் செய்யவேண்டிய அத்தனை நடவடிக்கைகளும் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கின்றன. அரசாங்கம் எல்லாவிதமான நடவடிக்கைகளும் எடுத்துக் கொண்டிருக்கிறது என்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

**திரு. மீ. கலியாணசுந்தரம்** : பிரதம என்ஜினியரிடமிருந்து வந்திருக்கும் திட்டங்களின் விவரங்கள் என்னவென்று கூற முடியுமா? சென்னை நகருக்கு வழியில் உள்ள இதர முக்கிய நகரங்களுக்கும் குடிதண்ணீர் வழங்க திட்டமுண்டா?

**கனம் திருமதி ஜோதி வெங்கடாசலம்** : தனிக் கேள்வி போட்டால் பதில் அளிக்கிறேன்.

*Reports of the District Development Councils*

* 106 Q.—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Chief Minister be pleased to state when copies of the Annual Reports of the District Development Councils for the year 1960–61 will be placed on the table of the House?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The reports received from the Collectors are under examination and they will be placed on the table of the House early.

**திரு. மீ. கலியாணசுந்தரம்** : 1960-61-ம் ஆண்டு அறிக்கை இன்னும் சபைக்கு வரவில்லையே. இவ்வளவு காலதாமதம் ஆகலாமா? இந்தச் சட்டத்தின் 11-வது விதிப்படி ஒவ்வொரு வருட அறிக்கையும் அடுத்த வருடம் சட்டசபை முன் வைக்கப்படவேண்டுமென்று இருக்கிறதே, அதன்படி துரிதமான நடவடிக்கைகள் எடுக்க முடியுமா?

9-00 a.m. **கனம் திரு. எம். பக்தவத்சலம்** : குறிப்பிட்ட சட்டத்தின் 14 (2) · (வி) பிரிவின்படி விதிகள் அமைக்கப்படவேண்டும். அந்த விதிப்படி எந்த பாரத்தில் இந்த அறிக்கை வரவேண்டுமென்று நிர்ணயிக்கப்படவேண்டும். விதிகள் அமைக்கப்படுவதில் தாமதமாயிற்று. இன்னும் அந்த விதிகள் பூர்த்தியாகவில்லை. இருந்தாலும் 1960-61-ம் ஆண்டு அறிக்கையை கலக்டர்கள் அனுப்பவேண்டுமென்று, அவர்களே ஏதாவது ஒரு பாரத்தில் அனுப்பவேண்டுமென்று தெரிவித்திருப்பதால் அது வரும், வந்த பின்னர் இந்த மன்றத்தில் வைக்கப்படும்.

**திரு. மீ. கலியாணசுந்தரம்** : ஸார், கனம் அமைச்சர் அவர்கள் கூறிய பதிலில் கலக்டர்களிடமிருந்து பதில் வந்து விட்டது என்று முதலில் சொன்னார்கள். இப்போது, கலக்டர்களுக்கு எந்தவிதமான முறையில் பதில் அனுப்பவேண்டும் என்று கேட்டிருந்தோம். அதில் தாமதமானதினால் எந்த வித பாரத்திலாவது பதில் அனுப்பவேண்டும் என்று கேட்டிருக்கிறோம் என்று சொல்லுகிறார்கள். இதிலிருந்து அமைச்சர் அவர்களின் பதில் முன்னுக்குப் பின் முரணாக இருக்கிறது. ஆகவே இதில் எது உண்மை என்று தெரியவில்லை. உண்மையிலேயே பதில் வந்து விட்டதா அல்லது வரவில்லையா என்பதை அறிய விரும்புகிறேன்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம்** : என்னுடைய பதிலில் முரண்பாடு ஒன்றும் இல்லை. கலக்டர்களிடமிருந்து பதில்கள் வந்துவிட்டன. அவை அரசாங்கத்தின் பரிசீலனையில் இருக்கிறது. பரிசீலனை முடிந்ததும் சபையின் முன்னால் சமர்ப்பிக்கப்படும்.

MR. SPEAKER : Questions are over.